ஓம்

சிவ சிவ

திருச்சிற்றம்பலம்

திருஞானசம்பந்தப்பெருமான் அருளிய

# மழை வேண்டல்





அன்பளிப்பு

அருள் நெறித் திருக்கூட்டம்

கண்டவராயன்பட்டி

ஓம்

திருச்சிற்றம்பலம்

# மழை வேண்டல்

திருஞானசம்பந்தப்பெருமான்

7 திருத்தலங்களில் மழை பெய்ய பாடிய

**திருப்பதிகங்கள்**



வெளியிட்டவர் :

**நா. அருணாசலன்**

அருள்நெறித் திருக்கூட்டம்

**கண்டவராயன்பட்டி**

ஓம்

என் கடன் பணி செய்து கிடப்பதே

# சில வார்த்தைகள்

நாட்டில் மழை இல்லை. விவசாயம் செழிக்காமல் ஏழை விவசாயிகள் கிராமங்களில் சிரமப்படுகின்றனர் இதனை தீர்க்க வல்லவர், சிவபெருமானே!

எனவே, திருஞானசம்பந்தப்பெருமான், 7 திருத்தலங்களில் பாடிய திருப்பதிகங்களை, அருள்நெறித் திருக்கூட்டத்தின் கடமையாகக் கொண்டு, நூலாக்கி தந்துள்ளோம்.

இதனை கிராம மக்கள் கோவில்களிலும், மாலை நேரத்தில் கிராமச்சாவடிகளிலும்பாடி சிவ பெருமானை நினைத்து பிரார்த்தனை செய்து வழி பாடு செய்தால் மழை பெய்யும். விவசாயம் செழிக்கும். நாட்டு மக்கள் நலமுடன் வாழலாம்.

கண்டவராயன்பட்டி
18- 2- 92
பிரசோற்பத்தி
மாசி 6 (மகம்)

**நா. அருணாசலனீ**
செயலாளர்
அருள்நெறித் திருக்கூட்டம்




திருவண்ணாமலை ஆதீனம் மகாசந்நிதானத்தின்

## ஆசியுரை

நாடு செழிக்க, நல்ல மழை பெய்ய
விவசாயம் செழித்து கிராம மக்கள்
நலமுடன் வாழ. சிவபெருமான்
திருவருள் கூட்டிவைக்குமாக,

— குன்றக்குடி அடிகளார்

ஓம்

கணபதியே நம



பிள்ளையார் பட்டிப் பெரும்பதியில்
வீற்றிருந்து வள்ளலாய் நலமளிக்கும்
ஆனைமுகத்தோனே உன்முன் உள்ளுருகில்
மக்கள் கவலைதீர வரம்தரும் வள்ளல்நீயே!

—நா, அருணாசலன்

ஓம்
சிவ சிவ
திருச்சிற்றம்பலம்

# சிவ வணக்கம்



உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்
நிலவு உலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய அம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவோம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

திருஞானசம்பந்தப் பெருமான் அருளிய



# மழைப் பதிகங்கள்

## 1. திருக்கழுமலம்

பண் : மேகராகக்குறிஞ்சி

1

சேஉயரும் திண்கொடியான் திருவடியே
சரண்என்று சிறந்தஅன்பால்
நாஇயலும் மங்கையொடு நான்முகன்தான்
வழிபட்ட நலங்கொள்கோயில்
வாவிதொறும் வண்கமல முகங்காட்டச்
செங்குமுதம் வாய்கள்காட்டக்
காவியிருங் கருங்குவளை கருநெய்தல்
கண்காட்டும் கழுமலமே.

2

பெருந்தடங்கண் செந்துவர்வாய்ப் பீடுடைய
மலைச்செல்வி பிரியாமேனி
அருந்தகைய சுண்ணவெண்ணீறு அலங்கரித்தான்
அமரர்தொழ அமருங்கோயில்
தரு,ந்தடக்கை முத்தழலோர் மனைகள்தொறும்
இறைவனது தன்மைபாடிக்
கருந்தடங்,கண் ணார்,கழல்பந்து அம்மானைப்
பாட்டுஅயரும் கழுமலமே,

3

அலங்கல்மலி வானவரும் தானவரும்
அலைகடலைக் கடையப்பூதம்
கலங்களழு கடுவிடம்உண்டு இருண்டமணி
கண்டத்தோன் கருதும்கோயில்
விலங்கல்அமர் புயல்மறந்து மீன்சனிபுக்கு
ஊன்சலிக்கும் காலந்தானும்
கலங்கல்இலா மனப்பெருவண் கையுடைய
மெய்யர்வாழ் கழுமலமே.

4

பார்இதனை நலிந்துஅமரர் பயம்எய்தச்
சயம்எய்தும் பரிசுவெம்மைப்
போர்இசையும் புரம்மூன்றும் பொன்றஒரு
சிலைவளைத்தோன் பொருந்தும்கோயில்
வார்இசைமென் முலைமடவார் மாளிகையில்
சூளிகைமேல் மகப்பாராட்டக்
கார்இசையும் விசும்புஇயங்கும் கணங்கேட்டு
மகிழ்வெய்தும் கழுமலமே.

5

ஊர்கின்ற அரவம்ஒளி விடுதிங்க
ளொடு வன்னி மத்தம்மன்னும்
நீர்நின்ற கங்கைநகு வெண்தலைசேர்
செஞ்சடையான் நிகழுங்கோயில்
ஏர்தங்கி மலர்நிலவி இசைவெள்ளி
மலைஎன்ன நிலவிநின்ற
கார்வண்டின் கணங்களால் கவின்பெருகு
சுதைமாடக் கழுமலமே.

6

தரும்சாதம் தந்து அருள் என்று அடிநினைந்து
தழல்அணைந்து தவங்கள்செய்த
பெரும்சதுரர் பெயலர்க்கும் பீடு ஆர். தோ
-ழமைஅளித்த பெருமான்கோயில்
அரிந்தவயல் அரவிந்தம் மதுஉகுப்ப
அதுகுடித்துக் களித்துவாளை
கரும்சகடம் இளகவளர் கரும்புஇரிய
அகம்பாயும் கழுமலமே.

7

புவி முதல்,ஐம் பூதமாய்ப் புலன்ஐந்தாய்
நிலன்ஐந்தாய்க் கரணம்நான்காய்
அவை அவைசேர் பயன்உருவாய், அல்லஉரு
வாய் நின்றான் அமருங்கோயில்
தவம்முயல்வோர் மலர்பறிப்பத் தாழவிடு
கொம்புதைப்பக் கொக்கின்காய்கள்
கவண்எறி,கல் போல்சுனையில் கரைசேரப்
புள் இரியும் கழுமலமே.

8

அடல்வந்த வானவரை அழித்துஉலகு
தெழித்துஉழலும் அரக்கர்கோமான்
மிடல்வந்த இருபதுதோள் நெரியவிரல்
பணிகொண்டோன் மேவும்கோயில்
நடவந்த உழவர்இது நடஒணு
வகைபரல்ஆய்த்து என்றுதுன்று
கடல்வந்த சங்குஈன்ற முத்து,வயல்
கரைகுவிக்கும் கழுமலமே.

9

பூமகள்தன் கோன்அயனும் புள்ளினெடு
கேழல்உரு வாகிப்புக்கிட்டு
ஆமளவும் சென்றுமுடி அடிகாணு
வகைநின்ருன் அமருங்கோயில்
பாமருவுங் கலைப்புலவோர் பன்மலர்கள்
கொண்டுஅணிந்து பரிசினுலே
காமனை நள் பூரித்துக் களிகூர்ந்து
நின்றுஏத்தும் கழுமலமே.

10

குணம்இன்றிப் புத்தர்களும் பொய்த்தவத்தை
மெய்த்தவமாய் நின்றுகையில்
உணல்மருவும் சமணர்களும் உணராத
வகைநின்ருன் உறையுங்கோயில்
மணம்மருவும் வதுவைஒலி விழவின்ஒலி
இவைஇசைய மண்மேல்தேவர்
கணம்மருவும் மறையின்ஒலி கீழ்ப்படுக்க
மேற்படுக்கும் கழுமலமே.

11

கற்றவர்கள் பணிந்துஏத்தும் கழுமலத்துள்
ஈசன்தன் கழல்மேல்நல்லோர்
நல்துணையாம் பெருந்தன்மை ஞானசம்
பத்தன்தான் நயந்துசொன்ன
சொல்துணையோர் ஐந்தினெருஐந்து இவை வல்லவர்
தூமலராள் துணைவர்ஆகி
முற்றுலகம் அதுஆண்டு முக்கணன்
அடிசேர முயல்கின்ருரே.

திருச்சிற்றம்பலம்,

# 2. திருவையாறு

திருச்சிற்றம்பலம்

1

புலன்ஐந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
அறிவுஅழிந்திட்டு ஐம்மேல்உந்தி
அலமந்த போதாக அஞ்சேல்என்று
அருள்செய்வான் அமருங்கோயில்
வலம்வந்த மடவார்கள் நடமாட
முழவுஅதிர மழைஎன்று அஞ்சிச்
சிலமந்தி அலமந்து மரம்ஏறி
முகில்பார்க்கும் திருவையாறே.

2

விடல்ஏறு படநாகம் அரைக்குஅசைத்து
வெற்புஅரையன் பாவையோடும்
அடல்ஏறுஒன்று அதுஏறி அம்சொலீர்
பலிஎன்னும் அடிகள்கோயில்
கடல்ஏறித் திரைமோதிக் காவிரியின்
உடன் வந்து கங்குல்வைகித்
திடல்ஏறிச் சுரிசங்கம் செழுமுத்துஅங்கு
ஈன்றுஅலைக்கும் திருவையாறே.

3

கங்காளர் கயிலாய மலையாளர்
கானப்பே ராளர், மங்கை
பங்காளர் திரிசூலப் படையாளர்
விடையாளர் பயிலுங்கோயில்
கொங்காளப் பொழில்நுழைந்து கூர்வாயால்
இறகுஉலர்த்திக் கூதல்நீங்கிச்
செங்கால்நல் வெண்குருகு பைங்கானல்
இரைதேரும் திருவையாறே.

4

ஊன்பாயும் முடைதலைகொண்டு ஊர்ஊரின்
பலிக்குஉழல்வார் உமையாள்பங்கர்
தான்பாயும் விடைஏறும் சங்கரனர்
தழல்உருவர் தங்கும்கோயில்
மான்பாய வயல் அருகே மரம்ஏறி
மந்திபாய் மடுக்கள்தோறும்
தேன்பாய மீன்பாயச் செழுங்கமல
மொட்டுஅலரும் திருவையாறே.

5

நீரோடு கூவிளமும் நிலாமதியும்
வெள்ளெருக்கும் நிறைந்தகொன்றைத்
தாரோடு தண்கரந்தை சடைக்குஅணிந்த
தத்துவனர் தங்கும்கோயில்
காரோடி விசும்புஅளந்து கடிநாறும்
பொழில்அணைந்த கமழ்தார்வீதித்
தேரோடும் அரங்குஏறிச் சேயிழையார்
நடம்பயிலும் திருவையாறே.

6

வேந்தாகி விண்ணவர்க்கும் மண்ணவர்க்கும்
நெறிகாட்டும் விகிர்தன்ஆகிப்
பூந்தாம நறுங்கொன்றை சடைக்குஅணிந்து
புண்ணியனர் நண்ணுங்கோயில்
காந்தாரம் இசைஅமைத்துக் காரிகையார்
பண்பாடக் கவின்ஆர்வீதித்
'தேம்தாம்' என்று அரங்கேறிச் சேயிழையார்
நடமாடும் திருவையாறே.

7

நின்றுலா நெடுவிசும்பில் நெருக்கிவரு
புரமூன்று நீள்வாய்அம்பு
சென்றுலாம் படிதொட்ட சிலையாளி
மலையாளி சேருங்கோயில்
குன்றெலாம் குயில்கூவக் கொழும்பிரசம்
மலர்பாய்ந்து வாசமல்கு
தென்றலார் அடிவருடச் செழுங்கரும்பு
கண்வளரும் திருவையாறே.

8

அஞ்சாதே கயிலாய மலையெடுத்த
அரக்கர்கோன் தலைகள்பத்தும்
மஞ்சாடு தோள்நெரிய அடர்த்துஅவனுக்கு
அருள்புரிந்த மைந்தர்கோயில்
இஞ்சாயல் இளந்தெங்கின் பழம்விழ
இளமேதி இரிந்துஅங்குஓடிச்
செஞ்சாலிக் கதிர்உழக்கிச் செழுங்கமல
வயல்படியும் திருவையாறே.

9

மேலோடி விசும்புஅணவி வியன்நிலத்தை
மிகஅகழ்ந்து மிக்குநாடும்
மாலோடு நான்முகனும் அறியாத
வகைநின்றான் மன்னுங்கோயில்
கோலோடக் கோல்வளையார் கூத்தாடக்
குவிமுலையாக முகத்தில்நின்று
சேலோடச் சிலையாடச் சேயிழையார்
நடமாடும் திருவையாறே.

10

குண்டாடு குற்றுடுக்கைச் சமணரொடு
சாக்கியரும் குணம்ஒன்றுஇல்லா
மிண்டாடு மிண்டர்உரை கேளாதே
ஆள்ஆமின் மேவித்தொண்டீர்
எண்தோளர் முக்கண்ணர் எம்ஈசர்
இறைவர்இனிது அமருங்கோயில்
செண்டாடு புனல்பொன்னிச் செழுமணிகள்
வந்துஅலைக்கும் திருவையாறே.

11

அன்னமலி பொழில்புடைசூழ் ஐயாற்று,எம்
பெருமானை அம்தண்காழி
மன்னியசீர் மறைநாவன் வளர்ஞான
சம்பந்தன் மருவுபாடல்
இன்னிசையால் இவைபத்தும் இசையுங்கால்
ஈசன்அடி ஏத்துவார்கள்
தன்இசையோடு அமர்உலகில் தவநெறிசென்று
எய்துவார் தாழாதுஅன்றே.

திருச்சிற்றம்பலம்

வான்முகில் வழாது பெய்க
மலிவளம் சுரக்க! மன்னன்
கோன்முறை அரசு செய்க!
குறைவிடாது உயிர்கள் வாழ்க!
நான்மறை அரங்கள் ஓங்க!
நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவ நீதி
விளங்குக உலக மெல்லாம்!

—கந்தபுராணம்

# 3. திருமுதுகுன்றம்

திருச்சிற்றம்பலம்

1

மெய்த்துஆறு சுவையும் ஏழிசையும்
எண்குணங்களும் விரும்புநால்வே
தத்தாலும் அறிவொண்ணு நடைதெளியப்
பளிங்கேபோல் அரிவைபாகம்
ஒத்தஆறு சமயங்கட்கு ஒருதலைவன்
கருதும்ஊர் உலவுதெண்ணீர்
முத்துஆறு எதிர்உதிர நித்திலம்,வா
ரிக்கொழிக்கும் முதுகுன்றமே.

2

வேரிமிகு குழலியொடு வேடுவனாய்
வெம்கானில் விசயன்மேவு
போரின்மிகு பொறைஅளந்து பாசுபதம்
புரிந்துஅளித்த புராணர்கோயில்
காரின்மலி கடிபொழில்கள் கனிகள்பல
மலர்உதிர்த்துக் கயமுயங்கி
மூரிவளங் கிளர்தென்றல் திருமுன்றில்
புகுந்துலவு முதுகுன்றமே.

3

தக்கனது பெருவேள்விச் சந்திரன்,இந்
திரன்,எச்சன், அருக்கன்,அங்கி
மிக்கவிதா தாவி,னொடும் விதிவழியே
தண்டித்த விமலர்கோயில்
கொக்குஇனிய கொழும்வருக்கை கதலி,கமுகு
உயர்தெங்கின் குவைகொள் சோலை
முக்கனியின் சாறுஒழுகிச் சேறுஉலரா
நீள்வயல்சூழ் முதுகுன்றமே,

4

வெம்மைமிகு புரவாணர் மிகைசெய்ய
விறல்அழிந்து விண்ணுளோர்கள்
செம்மலரோன், இந்திரன்,மால் சென்றுஇரப்பத்
தேவர்களே தேரதுஆக
மைம்மருவு மேருவிலும் மாசுணம்நாண்
அரி,எரி,கால் வாளிஆக
மும்மதிலும் நொடிஅளவில் பொடிசெய்த
முதல்வன்இடம் முதுகுன்றமே.

5

இழைமேவு கலைஅல்குல் ஏந்திழையாள்
ஒருபாலாய் ஒருபால்எள்காது
உழைமேவும் உரிஉடுத்த ஒருவன்இருப்
பிடம்என்பர் உம்பர்ஓங்கு
கழைமேவும் மடமந்தி மழைகண்டு
மகவினொடும் புக,ஒண்கல்லின்
முழைமேவு மால்யானை இரைதேரும்
வளர்சாரல் முதுகுன்றமே.

6

நகைஆர்வெண் தலைமாலை முடிக்குஅணிந்த
நாதன்இடம் நல்முத்தாறு
வகையாரும் வரைப்பண்டம் கொண்டுஇரண்டு
கரைஅருகு மறியமோதித்
தகையாரும் வரம்புஇடறிச் சாலி,கழு
நீர்,குவளை சாயப்பாய்ந்து
முகைஆர்செந் தாமரைகள் முகமலர
வயல்தழுவு முதுகுன்றமே.

7

அறம்கிளரும் நால்வேதம் ஆலின்கீழ்
இருந்தருளி அமரர்வேண்ட
நிறம்கிளர்,செந் தாமரையோன் சிரம்ஐந்தில்
ஒன்றுஅறுத்த நிமலர்கோயில்
திறங்கொள்மணித் தரளங்கள் வரத்திரண்டுஅங்கு
எழில்குறவர் சிறுமிமார்கள்
முறங்களினுல் கொழித்து,மணி செலவிலக்கி
முத்துஉலேப்பெய் முதுகுன்றமே.

8

கதிர்ஒளிய நெடுமுடிபத்து உடையகடல்
இலங்கையர்கோன் கண்ணும்வாயும்
பிதிர்ஒளிய கனல்பிறங்கப் பெருங்கயிலே
மலேயை,நிலே பெயர்த்தஞான்று
மதில்அளக்கக்கு இறைமுரல மலர்அடிஒன்று
ஊன்றி,மறை பாடஆங்கே
முதிர்ஒளிய சுடர்நெடுவாள் முன்ஈந்தான்
வாய்ந்தபதி முதுகுன்றமே.

9

பூவார்பொன் தவிசின்மிசை இருந்தவனும்
பூந்துழாய் புனேந்தமாலும்
ஓவாது கழுகு,ஏன மாய், உயர்ந்துஆழ்ந்து
உறநாடி உண்மைகாணுத்
தேவாரும் திருஉருவன் சேருமலே
செழுநிலத்தை மூடவந்த
மூவாத முழங்கொலிநீர் கீழ்தாழ
மேல்உயர்ந்த முதுகுன்றமே.

10

மேனியில், சீவரத்தாரும் விரிதருதட்டு
 உடையாரும் விரவல்ஆகா
ஊனிகளாய் உள்ளார்சொல் கொள்ளாதும்
 உள்உணர்ந்துஅங்கு உய்மின்தொண்டீர்
ஞானிகளாய் உள்ளார்கள் நான்மறையை
 முழுதுஉணர்ந்து ஐம் புலன்கள்செற்று
மோனிகளாய் முனிச்செல்வர் தனித்திருந்து
 தவம்புரியும் முதுகுன்றமே.

11

முழங்கொலிநீர் முத்தாறு வலஞ்செய்யும்
 முதுகுன்றத்து இறையை,மூவாப்
பழங்கிழமைப் பன்னிருபேர் படைத்துடைய
 கழுமலமே பதியாக்கொண்டு
தழங்குஎரிமூன்று ஓம்புதொழில் தமிழ்ஞான
 சம்பந்தன் சமைத்தபாடல்
வழங்கும்இசை கூடும்வகை பாடும்அவர்
 நீடுஉலகம் ஆள்வர்தாமே.

திருச்சிற்றம்பலம்.



# 4. திருவீழிமிழலை

திருச்சிற்றம்பலம்

1

ஏரிசையும் வடஆலின் கீழ்,இருந்துஅங்கு
ஈர்இருவர்க்கு இரங்கிநின்று
நேரிய,நான் மறைப்பொருளை உரைத்துஒளிசேர்
நெறியளித்தோன் நின்றகோயில்
பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும்
பயின்றுஓதும் ஓசைகேட்டு
வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள்
பொருள்சொல்லும் மிழலையாமே.

2

பொறிஅரவம் அதுசுற்றிப் பொருப்பே,மத்
தாகப்,புத் தேளிர்,கூடி
மறிகடலைக் கடைந்திட்ட விடம்உண்ட
கண்டத்தோன் மன்னுங்கோயில்
செறிஇதழ்த்தா மரைத்,தவிசில் திகழ்ந்துஓங்கும்
இலைக்குடைக்கீழ்ச் செய்யார்செந்நெல்
வெறிகதிர்ச்,சா மரைஇரட்ட, இளஅன்னம்
வீற்றிருக்கும் மிழலையாமே.

3

எழுந்துஉலகை நலிந்துஉழலும் அவுணர்கள்தம்
புரம்மூன்றும் எழிற்கண் நாடி
உழுந்துஉருளும் அளவையின்,ஒள் எரிகொளவெஞ்
சிலைவளைத்தோன் உறையுங்கோயில்
கொழுந்தரள நகைகாட்டக் கோகநதம்
முகம்காட்டக் குதித்துநீர்மேல்
விழுந்தகயல் விழிகாட்ட வில்பவழம்
வாய்காட்டும் மிழலையாமே.

4

உரைசேரும் எண்பத்து நான்கு,நூறு
ஆயிரமாம் யோனிபேதம்
நிரைசேரப் படைத்துஅவற்றின் உயிர்க்குஉயிராய்
அங்கங்கே நின்ருன்கோயில்
வரைசேரும் முகில்மழுவ மயில்கள்பல
நடமாட வண்டுபாட
விரைசேர்,பொன் இதழிதர, மென்காந்தள்
கையேற்கும் மிழலையாமே.

5

காணுமாறு அரிய,பெரு மான்,ஆகிக்
காலமாய்க் குணங்கள் மூன்ருய்ப்
பேணும்மூன்று உருவாகிப் பேருலகம்
படைத்து அளிக்கும் பெருமான்கோயில்
தாணுவாய் நின்ற,பர தத்துவனை
உத்தமனை இறைஞ்சிர்என்று
வேணுவார் கொடி,விண்ணோர் தமை,விளிப்ப
போல்,ஓங்கும் மிழலையாமே.

6

அகன் அமர்நத அனபினராய், அறுபகைசெற்று
ஐம்புலனும் அடக்கிஞானம்
புகல்உடையோர் தம்,உள்ளப் புண்டரிகத்
துள்,இருக்கும் புராணர்கோயில்
தகவுடைநீர் மணித்தலத்துச் சங்குள,வர்க்
கம்,திகழச் சலசத்தியுள்
மிகவுடைய புன்குமலர்ப் பொரிஅட்ட,
மணம்செய்யும் மிழலையாமே.

7

ஆறு ஆடு சடைமுடியன் அனல்ஆடு
மலர்க்கையன் இமயப்பாவை
கூறுஆடு திருஉருவன், கூத்தாடும்
குணம்உடையோன் குளிரும்கோயில்
சேறு ஆடு செங்கழுநீர்த் தாது ஆடி
மதுஉண்டு சிவந்தவண்டு
வேறு ஆய உருஆகிச் செவ்வழிநல்
பண்பாடும் மிழலையாமே.

8

கருப்பமிகும் உடல்அடர்த்துக் கால்ஊன்றிக்
கைமறித்துக் கயிலைஎன்னும்
பொருப்புஎடுக்கல் உறும் அரக்கன் பொன்முடிதோள்
நெரித்தவிரல் புனிதர்கோயில்
தருப்பமிகு சலந்தரன்தன் உடல்தடிந்த
சக்கரத்தை வேண்டிஈண்டு
விருப்பொடு மால் வழிபாடு செய்ய,இழி
விமானம்சேர் மிழலையாமே.

9

செந்தளிர்,மா மலரோனும் திருமாலும்
ஏனமோடு அன்னமாகி
அந்தம்அடி காணாதே அவர்ஏத்த
வெளிப்பட்டோன் அமருங்கோயில்
புந்தியினால், மறைவழியே புல்பரப்பி
நெய்,சமிதை கையிற்கொண்டு
வெம்தழலின் வேட்டு,உலகில் மிகஅளிப்போர்
சேரும்ஊர் மிழலையாமே.

10

எண்இறந்த அமணர்களும் இழிதொழில்சேர்
சாக்கியரும் என்றும்தன்னை
நண்ணரிய வகைமயக்கித் தன்அடியார்க்கு
அருள்புரியும் நாதன்கோயில்
பண்அமரும் மென்மொழியார் பாலகரைப்
பாராட்டும் ஓசைகேட்டு
விண்ணவர்கள் வியப்பெய்தி விமானத்தோ
டும்,இழியும் மிழலையாமே.



11

மின்னியலும் அணிமாடம் இடைவீழி
மிழலையான் விரையார்பாதம்
சென்னிமிசைக் கொண்டுஒழுகும் சிரபுரக்கோன்
செழுமறைகள் பயிலும்நாவன்
பன்னியசீர் மிகுஞான சம்பந்தன்
பரிந்துஉரைத்த பத்தும்ஏத்தி
இன்னிசையால் பாடவல்லார் இருநிலத்தில்
ஈசன்எனும் இயல்பினோரே.

திருச்சிற்றம்பலம்



# 5. திருக்கச்சியேகம்பம்

திருச்சிற்றம்பலம்

1

வெந்தவெண் பொடிப்பூசு மார்பின்,விரி
நூல்,ஒருபால் பொருந்தக்
கந்தமல்கு குழலியோடும் கடிபொழில்
கச்சி தன்னுள்
அந்தம்இல் குணத்தார் அவர்போற்ற
அணங்கினொடு ஆடல்புரி
எந்தை மேவிய ஏகம்பம்
தொழுதுஏத்த இடர்கெடுமே.



2

வரம்திகழும் அவுணர் மாநகர்மூன்(று)
உடன்மாய்ந்து அவியச்
சரம்துரந்து எரிசெய்த தாழ்சடைச்
சங்கரன் மேயஇடம்
குருந்தம் மல்லிகை கோங்கு,மா
தவி,நல்ல குரா,மரவம்
திருந்து,பைம் பொழில்கச்சி ஏகம்பம்
சேர இடர்கெடுமே.

3

வண்ணவெண் பொடிபூசும் மார்பின்
வரிஅர வம்,புனைந்து
பெண்அமர்ந்து எரிஆடல் பேணிய
பிஞ்ஞகன் மேயஇடம்
விண்அமர் நெடுமாடம் ஓங்கி
விளங்கிய கச்சிதன்னுள்
திண்ணமாம் பொழில்சூழ்ந்த ஏகம்பம்
சேர இடர்கெடுமே,

4

தோலும்,நா லும்துதைந்த வரைமார்பில்
சுடலைவெண் ணீறுஅணிந்து
காலன்,மாள் வுறக்,காலால் காய்ந்த
கடவுள் கருதும்இடம்
மாலை,வெண் மதிதோயும் மாமதில
கச்சி மாநகருள்
ஏலம்நாறிய சோலைசூழ் ஏகம்பம்
ஏத்த இடர்கெடுமே.

5

தோடுஅணிம் மலர்க்கொன்றை சேர்சடைத்
தூமதி யம்,புனைந்து
பாடல்,நான் மறையாகப் பல்கணைப்
பேய்கள், அவைசூழ
வாடல்,வெண் தலையோடு அனல்ஏந்தி
மகிழ்ந்து,உடன் ஆடல்புரி
சேடர்சேர் கலிக்கச்சி ஏகம்பம்
சேர இடர்கெடுமே.

6

சாகம்,பொன் வரையாகத் தானவர்
மும்மதில் சாயஎய்து
ஆகம்பெண் ஒருபாகம் ஆக
அரவொடு நூல்அணிந்து
மாகம்தோய் மணிமாடம் மாமதில்
கச்சி மாநகருள்
ஏகம் பத்து உறைஈசன் சேவடி
ஏத்த இடர்கெடுமே.




8

வாள்நிலா மதிபுல்கு செஞ்சடை
வாள்அர வம்,அணிந்து
நாண்,இடத் தின்இல்வாழ்க்கை பேணி
நகுதலையில் பலிதேர்ந்து
ஏண்இலா அரக்கன்தன் நீள்முடி
பத்தும் இறுத்தவன்ஊர்
சேண்உலாம் பொழில்கச்சி ஏகம்பம்
சேர இடர்கெடுமே.

9

பிரமனும் திருமாலும் கைதொழப்
பேர்அழல் ஆயபெம்மான்
அரவம் சேர்சடை அந்தணன்
அணங்கினொடு அமரும்இடம்
கரவில்வண் கையினர்கள் வாழ்கலிக்
கச்சி மாநகருள்
மரவம்சூழ் பொழில்,ஏகம் பந்தொழ
வல்வினை மாய்ந்துஅறுமே.

10

குண்டுபட்டு அமணாய் அவரொடுங்
கூறை,தம் மெய்போர்க்கும்
மிண்டர் கட்டிய கட்டுரை
அவைகொண்டு விரும்பேல்மின்
விண்டவர் புர மூன்றும் வெம்கணை
ஒன்றினால் அவியக்
கண்டவன் கலிக்கச்சி ஏகம்பம்
காண இடர்கெடுமே.

11

ஏரினார் பொழில்சூழ்ந்த கச்சி
ஏகம்பம் மேயவனைக்
காரினார் மணிமாடம் ஓங்கு
கழுமல நல்நகருள்
பாரினார் தமிழ்ஞான சம்பந்தன்
பரவிய பத்தும்வல்லார்
சீரினார் புகழ்ஓங்கி விண்ணவ
—ரோடும் சேர்பவரே.

திருச்சிற்றம்பலம்.



# 6. திருப்பறியலூர் வீரட்டம்

திருச்சிற்றம்பலம்

1

கருத்தன் கடவுள் கனல்,ஏந் தி,ஆடும்
நிருத்தன் சடைமேல் நிரம்பா மதியன்
திருத்தம் உடையார் திருப்பறி யலூரில்
விருத்தன்,எ னத்தகும் வீரட்டத் தானே.

2

மருந்தன் அமுதன் மயானத்துள் மைந்தன்
பெருந்தண் புனல்சென்னி வைத்த பெருமான்
திருந்து மறையோர் திருப்பறி யலூரில்
விரிந்த மலர்ச்சோலை வீரட்டத் தானே.

3

குளிர்ந்தார் சடையன் கொடுஞ்சிலை வில்காமன்
விளிந்தான் அடங்க வீந்துஎய்தச் செற்றான்
தெளிந்தார் மறையோர் திருப்பறி யலூரில்
மிளிர்ந்தார் மலர்ச்சோலை வீரட்டத் தானே.

4

பிறப்பாதி இல்லான் பிறப்பார் பிறப்புச்
செறப்பாதி அந்தம் செலச்செய்யுந் தேசன்
சிறப்பாடு உடையார் திருப்பறி யலூரில்
விறல்பா ரிடம்சூழ வீரட்டத் தானே.

5

கரிந்தார் இடுகாட்டில் ஆடும்,க பாலி
புரிந்தார் படுதம் புறங்காட் டிலாடும்
தெரிந்தார் மறையோர் திருப்பறி யலூரில்
விரிந்தார் மலர்ச்சோலை வீரட்டத் தானே.

6

அரவுற்ற நாணு அனல்அம்பு அதாகச்
செருவுற் றவர்புரம் தீஎழச் செற்ருன்
தெருவில் கொடிசூழ் திருப்பறி யலூரில்
வெருவுற் றவர்தொழும் வீரட்டத் தானே.

7

நரையார் விடையான் நலங்கொள் பெருமான்
அரையார் அரவம் அழகா அசைத்தான்
திரையார் புனல்சூழ் திருப்பறி யலூரில்
விரையார் மலர்ச்சோலை வீரட்டத் தானே.

8

வளைக்கும் எயிற்றின் அரக்கன் வரைக்கீழ்
இளைக்கும் படிதான் இருந்துஎழை அன்னம்
திளைக்கும் படுகர்த் திருப்பறி யலூரில்
விளைக்கும் வயல்சூழ்ந்த வீரட்டத் தானே.

9

விளங்குஒண் மலர்மேல் அயன்,ஓத வண்ணன்
துளங்கும் மனத்தார் தொழத்,தழ லாய்நின்றான்
இளம்கொம்பு அனுளோடு இணைந்தும் பிணைந்தும்
விளங்கும் திருப்பறியல் வீரட்டத் தானே.

10

சடையன் பிறையன் சமண்,சாக் கியரோடு
அடை,அன்பு இலாதான் அடியார் பெருமான்
உடையன் புலியின் உரிதோல் அரைமேல்
விடையன் திருப்பறியல் வீரட்டத் தானே.

11

நறுநீர் உகுங்காழி ஞானசம் பந்தன்
வெறிநீர்த் திருப்பறியல் வீரட்டத் தானைப்
பொறிநீடு அரவன் புனைபாடல் வல்லார்க்கு
அறுநீடு அவலம் மறும்பிறப் புத்தானே.

திருச்சிற்றம்பலம்.

# 7. திருப்பராய்த்துறை

திருச்சிற்றம்பலம்

1

நீறுசேர்வதொர் மேனியர்நேரிழை
கூறுசேர்வதொர் கோலமாய்ப்
பாறுசேர்தலைக் கையர்பராய்த்துறை
ஆறுசேர்சடை அண்ணலே.

2

கந்தமாமலர்க் கொன்றைகமழ்சடை
வந்தபூம்புனல் வைத்தவர்
பைந்தண்மாதவி சூழ்ந்தபராய்த்துறை
அந்தம்இல்ல அடிகளே.

3

வேதர்வேதம்,எல் லாம்முறையால்விரித்து
ஓதநின்ற ஒருவனர்
பாதிபெண்உரு வாவர்பராய்த்துறை
ஆதிஆய அடிகளே.

4

தோலும்தம்அரை ஆடைசுடர்விடு
நூலும்தாம்அணி மார்பினர்
பாலும்நெய்பயின்று ஆடுபராய்த்துறை
ஆலநீழல் அடிகளே.

5

விரவிநீறுமெய் பூசுவர்மேனிமேல்
இரவில்நின்றுஎரி ஆடுவர்
பரவினர்அவர் வேதம்பராய்த்துறை
அரவம்ஆர்த்த அடிகளே.

6

மறையும்ஓதுவர் மான்மறிக்கையினர்
கறைகொள்கண்டம் உடையவர்
பறையும்சங்கும் ஒலிசெய்பராய்த்துறை
அறையநின்ற அடிகளே.

7

விடையும்ஏறுவர் வெண்பொடிப்பூசுவர்
சடையில்கங்கை தரித்தவர்
படைகொள்வெண்மழு வாளர்பராய்த்துறை
அடையநின்ற அடிகளே.

8

தருக்கின்மிக்க தசக்கிரிவன்தனை
நெருக்கினார்விரல் ஒன்றினால்
பருக்கினாரவர் போலும்பராய்த்துறை
அருக்கன்தன்னை அடிகளே.

9

நாற்றமாமல ரானெடும்மாலுமாய்த்
தோற்றமும்அறி யாதவர்
பாற்றினார்வினை யானபராய்த்துறை
ஆற்றல்மிக்க அடிகளே.

10

திருவிலிச்சில தேரமண்ஆதர்கள்
உருவிலாஉரை கொள்ளேலும்
பருவிலால்எயில் எய்துபராய்த்துறை
மருவி னான்தனை வாழ்த்துமே.

11

செல்வம்மல்கிய செல்வர்பராய்த்துறைச்
செல்வர்மேல்சிதை யாதன
செல்வன்ஞானசம் பந்தனசெந்தமிழ்
செல்வமாம்இவை செப்பவே.

திருச்சிற்றம்பலம்.